GRAPHIC BIOGRAPHY

# மேரி கியூரி

சாட்சில்பாக்ஸ் கிராஃபிக் பயோகிராபிஸ்

தமிழில்: குமரேசன் முருகானந்தம்





1902 ன் மே மாதத்தின் ஓர் இரவில், பாரிசில், மேரி மற்றும் பியர் கியூரி, மேரி பல ஆண்டுகளாக கடின உழைப்போடுக்கூடிய நாட்களைக் கழித்த அந்த பழைய கொட்டகைக்குச் சென்றனர்.

இருளில், இதுவரை யாரும் கண்டிறாத ஒரு அழகான ஒளியைக் கண்டனர். இது ரேடியத்தின் ஒளிர்வாகும்.

ரேடியம் கண்டுபிடிப்பாளரான மேரி கியூரி, ஆகச்சிறந்த முதல் பெண் விஞ்ஞானி ஆவார் - மேலும் இரண்டு நோபல் பரிசைப் பெற்ற முதல் நபரும் ஆவார். அவர், இந்த உலகிற்கு  ஒரு புதிய அறிவியல் பிரிவையும், மருத்துவ சிகிச்சை முறையையும் அளித்தார்.


அவர் போலந்தின் ***வார்ஷா***வில் பிறந்த போது, **மரியா ஸ்க்லோடோவ்ஸ்கா** என்று அழைக்கப்பட்டார்.
என் அன்பே குழந்தைகளே, உங்களுக்கு புதியதொரு தங்கைப்பாப்பா **மரியா** பிறந்திருக்கிறாள்!
நாங்கள் எப்போது அவளைப் பார்க்கமுடியும்?


அவளுடைய தந்தை, பேராசிரியர் **ஸ்க்லோடோவ்ஸ்கி** ஓர் இயற்பியல் பேராசிரியர். **மரியா**, சிறு குழந்தையாக இருந்தபோதே அவர் பயன்படுத்திய உபகரணங்களைப் காண ஆர்வமுடன் இருந்தாள்.
நீ ஒரு வேடிக்கையான குழந்தை! உனக்கு என்னுடைய இயற்பியல் உபகரணங்கள் பிடித்திருக்கிறதா?
இயற்பியல் உ ப க ர ண ங் க ள்! ஆமாம்!
**மரியா** எப்போதும் எதையும் மறந்ததில்லை. அவள் இதையும் மறக்கவில்லை. என்றாவது ஒரு நாள் அவள் இதை உபயோகிக்கக் கற்றுக்கொள்வாள்.


**வார்ஷா**, **ரஷ்யா**வால் கைப்பற்றப்பட்டு, அதன் ஆட்சியின் கீழிருந்த **போலந்தின்** ஒரு பகுதியாக இருந்தது. அனைவரும் **ரஷ்ய** மொழியைப் பயன்படுத்த வேண்டியிருந்தது. **போலிஷ்** வரலாறு அல்லது இலக்கியம் கற்கத் தடை விதிக்கப்பட்டிருந்தது.
ஆனால், சில தேசபக்தியுள்ள ஆசிரியர்கள் ரகசியமாக அவற்றைக் கற்பித்தார்கள். **மரியா**வின் ஆசிரியர் அவர்களில் ஒருவர்..
**மரியா**, ***ஸ்டானிஸ்லாஸ் அகஸ்டஸ்*** பற்றி சொல்.
அவர் 1764 ஆம் ஆண்டில் போலந்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசராவார். அவர் அறிவார்ந்த மற்றும் நன்கு கல்வி பயின்றவர்.
அந்த வகுப்பு **போலந்து** மொழியில் **போலிஷ்** வரலாற்றை படித்துக்கொண்டிருந்தது. இது ஒரு குற்றம்!



திடீரென்று மணி ஒலித்தது. மொத்த வகுப்பும் செயலற்றுப்போனது.
அதோ! அந்தச் சமிக்ஞை! அவசரம், மாணவிகளே!




நான்கு மாணவிகள் இடை கழியில் ஓடி புத்தகங்களையும் காகிதங்களையும் சேகரித்தனர்.






அவர்கள் அவற்றுடன் வேறொரு அறைக்கு ஓடினார்கள்.
உங்களது தையல் பொருட்களை வெளியே எடுங்கள்!




கதவு திறக்கப்படும் வேளையில் அவர்கள் தங்கள் இருக்கைகளில் அமர்ந்திருந்தனர். தலைமை ஆசிரியரும் அவருடன் ரஷியரான பள்ளி ஆய்வாளரும் வந்தனர்.
இது தையல் வகுப்பு. மாணவிகள் தையல் பயிலும்போது நான் அவர்களுக்கு **ரஷ்ய** தேவதைக் கதைகளை வாசிப்பேன்!
ம்ம்... அப்படியா







**மரியா**, தன்னை அழைத்துவிடக் கூடாது என்று வேண்டிக் கொண்டிருந்தாள். ஆனால் எப்போதும் அவளே அழைக்கப்பட்டாள். மிகச்சிறியவளாக இருந்தபோதிலும் அவள் துல்லியமாக ருஷ்ய மொழி பேசக்கூடியவள். மிகக் கெட்டிக்கார மாணவியும் கூட.




பின்னர், பேராசிரியர் **ஸ்கொலோடோவ்ஸ்கி**க்கு மிகவும் தரக்குறைவான பணிகள் கொடுக்கப்பட்டது. **மரியா** தனது மூத்த சகோதரியான **ப்ரொன்யா**விடம் பேசினார்.






ஆகையால் **மரியா** உயர்நிலைப் பள்ளிக்குச் சென்றாள். மேலும்,1883 **ஜூன்** மாதத்தில் பட்டமளிப்பு விழா நடைபெற்றது.




அவளுடைய தந்தை மிகவும் பெருமையடைந்தார்.







எனவே மரியா உறவினர்களை சந்திக்கச் சென்றாள். அவளது பெற்றோரின் சகோதரிகள் அவளுக்கு அருமையான உணவுகளைத் திணித்தார்கள். பெற்றோரின் சகோதரர்கள் அவளுக்கு குதிரையேற்றத்தைக் கற்றுக்கொடுத்தார்கள். அவளுடைய சகோதர சகோதரிகள் அவளை விருந்திற்கு அழைத்துச் சென்றார்கள்.




**குலிக்*** - வீடுவீடாக பனிச்சறுக்கிச் சவாரி செல்லும் பழைய போலந்துநாட்டு குளிர்கால பாரம்பரியக் கொண்டாட்டம்.

பின்னர் **குலிக்**கின் ஓர் இரவு வந்தது. தங்கள் ஒப்பனையுடன் இருந்த பெண்கள் பனிச்சறுக்கு வாகனங்களில் ஏறினர். அவர்களின் வழித்துணைகள் அவர்கள் அருகில் சவாரி செய்தனர்.









இருப்பினும், **குலிக்** நிறைவுக்கு வந்தது. அதுபோலவே **மரியா**வின் அற்புதமான விடுமுறையும் தான். செப்டெம்பர் மாதம் அவள் **வார்ஷா** திரும்பினாள்.







ஆனால், யாரும் பாடங்கள் கற்பத்தை விரும்பவில்லை. மேலும், அங்ஙனம் கற்க விரும்பியவர்கள் மரியாவிற்கு சிரமமளித்தனர்.










அவள் மோசமான வானிலையில் **வார்ஷா**வைச் சுற்றித் திரிந்தவாறு நேரத்தை செலவழிப்பதுப் போல தோன்றியது. அவள் மிகச் சிறிதளவே பணமீற்றினாள்.


நான் கிராமப்புறத்தில் ஒரு குடும்பத்தோடு இருந்து பாடம் சொல்லித்தரும் வேலை செய்ய வேண்டும். அப்போது அந்த சம்பளம் உனக்கு உதவப் போதுமானதாக இருக்கும்.
கிராமத்தில் வாழ்க்கை? அப்பாவை விட்டுவிட்டு? நீ ஏன் அதை எனக்காக செய்யவேண்டும்?


ஓ, **பிரோன்யா** ஏனென்றால் நீ மூத்தவள். நீ பல வருடங்களா காத்துக்கொண்டிருக்கிறாய்! நீ டாக்டர் ஆனபிறகு எனக்கு உதவிசெய்யலாம்!



எனவே **பிரோன்யா**, ***சோர்போன்*** பல்கலைக்கழகத்தில் படிப்பதற்காக **பாரிஸ்** சென்றார். 1886-ல் பதினெட்டு வயதான **மரியா** ஒரு குடும்பத்தில் ஆசிரியையானாள்.
**மிஸ் ஸ்க்லோடோவ்ஸ்கா.**
உள்ளே வாம்மா! உன்னுடைய பொருட்களை எடுத்துக் கொள்! டீ அருந்தி உன்னை நீ கதகதப்பாக்கிக்கொள்.


பின்னர் அவள் குடும்பத்திலுள்ள இளையோர்களை சந்தித்தாள்.
இது என் மூத்த மகள் **ப்ரோன்கா**. **ஆண்ட்ஜியா** மற்றும் **ஜுலேக்** உனது சிறப்பு மாணவர்கள் ஆவர்.
நீ வந்ததற்காக நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்!


குடும்பத்தினர் நட்புடன் பழகினார்கள். **மரியா** நன்றாக பழகவும் செய்தாள். அப்போது மூத்த மகனான **கஸீமியர்ஸ்** விடுமுறைக்காக வீட்டிற்கு வந்தார்.
உன்னைப் போன்றதொரு பெண்ணை நான் இதுவரை அறிந்ததில்லை. நீ தெய்வீகமாக நடனமாடுகிறாய். நீ அழகாக இருக்கிறாய். நீ சவாரியும் படகோட்டவும் செய்கிறாய். நீ புத்திசாலியாகவும் இருக்கிறாய்!



**மரியா**, நான் உன்னை நேசிக்கிறேன். நீ என்னை நேசிப்பாயா, என்னை மணந்து கொள்வாயா?
நிச்சயமாக, **கஸீமியர்ஸ்**. நான் உன்னை நேசிக்கிறேன்!



கஸீமியர்ஸ் மகிழ்ச்சியுடன் பெற்றோர்களிடத்தில் ஒப்புதல் கேட்க சென்றார்.
நீ என் மகன் மற்றும் வாரிசு, ஒரு பயிற்சியளிக்கும் பெண்ணைத் திருமணம் செய்துகொள்வதா? ஒருபோதும் முடியாது!
ஓ, **காசிமியர்ஸ்**, நீ ஒரு பைத்தியம்! நீ அருகில் உள்ள சிறந்த வசதியான பெண்ணைப் பார்த்து திருமணம் செய்து கொள்ளலாம்!



**கஸீமியர்ஸ்** பள்ளிக்குத் திரும்பினான். **மரியா** தன்னுடய ஆசிரியப்பணியைத் தொடர்ந்தாள். அந்த குடும்பத்தில் அத்தகைய திருமணத்தைப் பற்றிய பேச்சு எதுவும் எழவில்லை.
நான் இங்கு தங்கியாக வேண்டும். நான் அனுப்பும் பணம் **ப்ரொன்யாவுக்குத்** தேவை. நான் காதலை மறந்து என் படிப்பைத் தொடர்வேன்.

மூன்று வருடங்கள், **மரியா** தனது மாணவர்களுடன் பணிபுரிந்தாள். அவளுடைய ஓய்வு நேரத்தில் அவள் படித்துக்கொண்டிருந்தாள். இயற்பியல், கணிதம், வேதியியல் ஆகியவற்றில் எந்த புத்தகங்கள் கிடைத்தாலும். அவள் கிட்டத்தட்ட நம்பிக்கையை இழந்தபோது, விஷயங்கள் நல்லபடியாக மாறத்தொடங்கின.




வசந்த காலம் வந்தது, மேலும் நல்ல செய்தி.







இருந்தாலும், குறைந்தபட்சம் அவள் **வார்ஷா**வுக்காகவாவது திரும்ப முடிந்தது. அங்கே ஒரு குடும்பத்துடன் ஒரு புதிய வேலை கிடைத்தது. அவள் தனது அப்பாவை அடிக்கடி கண்டாள். மாலை நேரங்களில் அவள் ஒரு உறவினரை சந்தித்தாள்.









அப்போதிலிருந்து, தான் என்ன செய்ய வேண்டுமென்று அவள் அறிந்தாள். அவள் அனைத்து ஓய்வு நேரத்தையும் ஆய்வகத்தில் கழித்தாள். மீதமிருந்த ஒவ்வொரு சென்டையும் அவள் சேமித்தாள். கடைசியாக, தான் பாரிஸுக்கு வரக்கூடும் என்று **ப்ரொன்யா**வுக்கு எழுதினாள்.




விடைபெறும் அந்த நாளும் வந்தது.







மூன்று நாட்களுக்கு பின்னர் அவள் பாரிசில் ப்ரொன்யா மற்றும் அவளது புதிய கணவர், காசிமிர் டிளுஸ்கி வாழ்ந்த குடியிருப்பை சென்றடைந்தாள்.
ஒரு வழியாக, நீ இங்கே வந்துவிட்டாய்
குட்டி சகோதரியே நல்வரவு!


நான் உனக்கு உன்னுடய அறையை காண்பிக்கிறேன். சிறியது ஆனால் அமைதியானது.
தயவு செய்து! நான் முதலில் சோர்பானைச் சென்று பார்க்கலாமா?


சொன்ன வழியைப் பின்பற்றி, அவள் ஒரு பேருந்தின் திறந்த மேல் தளத்திற்கு ஏறிச் சென்றாள்.
பிரான்ஸ்! சுதந்திரமான காற்றுள்ள இடம். சுதந்திரமான மக்களின் இடம். ரஷ்ய உளவாளிகள் இல்லாத இடம்!


இறுதியாக அவள் தன் இலக்கை அடைந்தாள்.
FRENCH REPUBLIC FACULTY OF SCIEN FIRST QUARTER
CLASSES WILL BEGIN AT THE SORBONNE ON NOV. 3 1891
சோர்போன் --- எங்கே பெண்கள் சுதந்திரமாக கற்றுக்கொள்ள முடியும் --- எங்கே நான் சுதந்திரமாக கற்றுக்கொள்ள முடியும்!

அவள் உள்ளே சென்று, கட்டணத்தைச் செலுத்தி, வகுப்புகளுக்கு பதிந்து கொண்டாள்.




வகுப்பு தொடங்கிற்று.







விரைவில் பின்னர் ...



ஆனால், **மேரி** வலியுறுத்தினாள். விரைவிலேயே அவள், வெளிச்சத்திற்கு ஒரேயொரு விளக்கும், வெப்பத்திற்கு ஒரு சிறிய எரிசாராய அடுப்பும், தரைத் தளத்திலிருந்து நீர் எடுத்துவர ஒரு குவளையும் இருந்த மேல் மாடி அறைக்கு நகர்ந்தாள்.




அவள் சாப்பிடக்கூட மறந்துவிட்டாள். அவள் வெளுத்தும், மெலிந்தும் வந்தாள். ஒரு நாள் அவள் மாடிப்படியில் மயங்கி விட்டாள். அவளுடைய தோழி **காசிமிர் டிளுஸ்கிக்கு** விரைந்து தகவல் அளித்தாள்.




ஆனால் யாரும் **மேரி** படிப்பதைத் தடுக்க முடியாது. மற்றும் இறுதி தேர்வுகளுக்குப் பிறகு, தேர்வு முடிவுகள் அறிவிக்கப்பட்டன.




**வார்ஷா**வில் ஒரு சில கோடை மாதங்கள் நன்கு ஓய்வெடுத்து, உண்டு உடல் தேறியப் பிறகு, கல்வி உதவித்தொகையின் மூலம் கிடைத்தப் பணத்தோடு அவள் **பாரிசு**க்குத் திரும்பிச் சென்றாள்,
விரைவிலேயே அவள் நண்பர்களுடன் பிரசனையைப்பற்றி பேசினாள்.
சுயமாக சில ஆராய்ச்சி செய்ய எனக்கு ஒரு வாய்ப்பு உள்ளது. ஆனால் எனக்குத் தேவையான உபகரணங்கள் கொள்ள போதுமான அளவிற்குப் பெரிய ஆய்வுக்கூடம் இல்லை.
நான் என்னுடய நண்பர், ஒரு அருமையான விஞ்ஞானி ஒருவரிடம் பேசுகிறேன். அவரிடத்தில் நீ பயன்படுத்திக்கொள்ள போதுமான அளவிற்கு பெரிய ஆய்வக இடம் இருக்கலாம்.


**பியர் கியூரி**, ஒருவேளை உனக்கும் அவரைத் தெரிந்திருக்கும்
நிச்சயமாக! அவர் ஒரு சிறந்த விஞ்ஞானி, இயற்பியல் மற்றும் வேதியியல் ஆய்வகத்தின் தலைவராகவும் இருக்கிறார். ---- அவர் மிகவும் புத்திசாலி, என் சிறிய சோதனைகள் மூலம் அவரை தொல்லைசெய்வதற்கு!


ஆனால் அடுத்த நாள் அவரை சந்திப்பதற்கு அவள் வற்புறுத்தப்பட்டாள்.
**பியர், மேரி ஸ்க்லோடோவ்ஸ்கி**யை நீங்கள் சந்திக்கவேண்டுமென்று விரும்புகிறேன்.


அப்போதிலிருந்து, முடிந்தவரை **பியர் மேரி**யை அடிக்கடி சந்தித்தார். அவர் **மேரி**யுடன் காதல் வயப்பட்டார். **மேரி** மீண்டும் போலந்திற்குத் திரும்புவதற்கு முன்பு, தன்னைத் திருமணம் செய்துகொள்ளும்படி அவளிடம் கேட்டார்.
ஓ, **பியர்**, நீண்ட காலத்திற்கு முன்பே விஞ்ஞானத்தை முதலாவதாக வைக்கவும் ஒருபோதும் திருமணம் செய்து கொள்ளக்கூடாது என்றும் நான் முடிவெடுத்துள்ளேன்
நானும் அவ்வாறே முடிவெடுத்திருந்தேன்! ஆனால், அறிவியலைப் பற்றி ஒத்த கொள்கைகளைக்கொண்ட பெண்ணை சந்திப்பேன் என்று ஒருபோதும் நான் எதிர்பார்த்ததில்லை..


முடியாது, நான் வீடு திரும்ப வேண்டும். அப்பாவை கவனித்துக் கொள்ள வேண்டும். ஆசிரியப்பணியாற்ற வேண்டும். என்னால் முடிந்ததை எனது நாட்டிற்கு செய்யவேண்டும்.
ஆனால், போலந்தில் உன்னுடைய படிப்பைத் தொடர முடியாது. நீ உன்னுடைய ஆராச்சியை கைவிட்டுவிடக் கூடாது.
வார்ஷாவிற்கும், அவளுடைய அப்பாவிடமும் திரும்பிச்செல்ல மேரி பியர் மற்றும் பாரிஸை விட்டுச் சென்றாள்.


ஆனால் அவள் இலையதிர் காலத்தில் பாரிஸ் திரும்பினாள். மேலும், பியர் விட்டு கொடுக்கவில்லை. இறுதியாக மேரி அவரை நேசிப்பதாக ஒப்புக்கொண்டார்.
என் பெற்றோரின் செசக்ஸ் வீட்டிலேயே நாம் இருக்கலாம். அவர்கள் உன்னை மிகவும் நேசிக்கிறார்கள்!
நான் அவர்களை நேசிக்கிறேன். எனது குடும்பத்தை அவர்கள் நினைவுபடுத்துகிறார்கள்.


அவர்கள் 1895 ஜூலை 26, அன்று திருமணம் செய்து கொண்டார்கள். தங்கள் உறவினர்களும் நண்பர்களும் கையசைத்து விடைகொடுக்க, புதிய சைக்கிள்களில் கிராமப்புறங்களில் பயணம் செய்வதற்காக அவர்கள் புறப்பட்டார்கள்.
அவள் என் பியரியுடன் மகிழ்ச்சியாக இருப்பாள். அவனுக்கு நிகராக இந்த பூலோகத்தில் யாரும் இல்லை!
மேரி உனக்கு ஒரு அன்பான மகளாக இருப்பாள்!


அவர்கள் பாரிஸுக்குத் திரும்பியபோது, மேரி ஒரு சமையல் புத்தகத்தை வாங்கி, ப்ரொன்யா விடம் உதவி கேட்டாள். தான் பசித்திருந்தாள், ஆயினும் பியருக்கு நன்கு சமைத்துப்போட அவள் விரும்பினாள்.
உன்னுடைய சமையல் நன்றாக இருப்பதும், நான் சமைப்பது எல்லாம் மோசமாக இருப்பதும் ஏன்?
நீ கற்றுக்கொள்வாய்! நீ ஒருபோதும் வீட்டைக் கவனித்துக்கொண்டதில்லை.

செப்டம்பர் 1897 ல் ஒரு மகள் பிறந்தாள். அவர்கள் **ஐரீன்** என்று பெயரிட்டனர்.




ஆனால் மேரி குழந்தையை ஒரு செவிலியிடம் விட்டுவிட்டு, ஒவ்வொரு நாளும் எட்டு மணிநேரம் ஆய்வகத்திற்குச் சென்றார்.




அவரும் பியரும் அவர்களது மாலைநேரங்களை படித்தபடி கழித்தார்கள்.




* பிரஞ்சு இயற்பியலாளரான **ஹென்றி பெக்ரெல்**, ***யுரேனியம்*** வெளியிட்ட ஒரு விளக்க முடியாத எக்ஸ்ரே கதிரை கண்டுபிடித்தார்.




அவருக்கு கண்ணாடியால் மூடப்பட்டதும், குளிருக்கு பாதுகாப்பற்ற, நப்பான ஒரு கட்டடத்தின் தாழ்வாரம் கொடுக்கப்பட்டது. அவர் அதை பெற்றுக்கொண்டு தனது பணியைத் துவங்கினார்.
கதிரியக்கத்தின் வலிமை மாதிரியில் இருக்கும் ***யுரேனிய***த்தின் அளவைப் பொருத்தது என்பதை நான் அறிவேன். மேலும், அது வெப்பம் அல்லது ஒளியினால் பாதிக்கப்படுவதில்லை. அது எங்கிருந்து வருகிறது? அது வேறு எந்த உலோகத்திலும் உள்ளதா?


அவர் மற்ற வேதியியல் தனிம மாதிரிகளைப் பெற்று அவற்றையும் பரிசோதிக்கத் தொடங்கினார்.
பியர்! ***தோரியம்***, ***யுரேனியம்*** போன்ற கதிரியக்கத்தை வெளியிடுவதை இன்று நான் கண்டேன்!
நீ நிசமாகவே விஞ்ஞானி தான்!


இந்த வித்தியாசமாக ஒளிர்வதை கதிரியக்கம் என்று அழைக்கலாம் என நினைக்கிறீர்களா? மேலும், அங்கனம் கதிர் வீசும் தனிமத்தை கதிரியக்கியென்று அழைக்கலாமா? ஆம், இது எனக்கு பிடித்திருக்கிறது.


பின்னர் **மேரி** தனது மாதிரிகளில் கதிரியக்கத்தின் அளவை அறிய சோதனைகள் செய்தார். முடிவுகள் அவருக்கு ஆச்சரியமளித்தன.
எனது பரிசோதனைகளை நான் மீண்டும்மீண்டும் செய்துள்ளேன். எந்த தவறும் இல்லை. இங்கு, இந்த மாதிரி உற்பத்தி செய்யும் ***யுரேனிய***த்தின் அளவைவிட மிக அதிக அளவிற்கு கதிரியக்கம் உள்ளது.

நிச்சயமாக, அவர் அதை **பியரி**யுடன் பேசினார்.

**பியரி**, இது என்னவென்று நீங்கள் நினைக்கிறீர்களா?
நான் தவறு செய்யாதிருந்தால், ஓர் அறியப்படாத தனிமமே இந்த சக்தி வாய்ந்த கதிர்வீச்சை உறுவாக்கியிருக்க வேண்டும்!
ஒரு புதிய தனிமம்!






**மேரி**யின் பணியின் முக்கியத்துவத்தை உணர்ந்து, அவருக்கு உதவிட **பியர்** தனது பணியை ஒதுக்கி வைத்தார். விரைவிலேயே ***யுரேனிய***த்தை தாங்கி வரும் தாதுவில் மேலும் இதுவரை அறியப்படாத இரண்டு தனிமங்கள் இருப்பதை அவர்களது பரிசோதனைகள் காண்பித்தன.




அந்த புதிய கதிரியக்கத் தனிமங்கள் என்ன செய்யக்கூடும் என்பதைப்பற்றி நிறைய விஷயங்களை **க்யூரி** இருவரும் அறிந்திருந்தனர். ஆனால் மற்ற விஞ்ஞானிகள் அவற்றை நம்புவதற்கு, அவற்றை அவர்கள் பார்க்கவும், எடைபோடவும். உணரவும் வேண்டும்.

அது உண்மையானால், நீங்கள் வலியுறுத்துவது விஞ்ஞானிகள் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக வைத்திருக்கும் நம்பிக்கையை தலைகீழாகப் புரட்டிப் போட்டுவிடும்.



புதிய தனிமங்களின் அறிகுறிகளை ***பிட்ச்பிளெண்ட்**** தாதுவில் இருந்து **மேரி** கண்டறிந்ததார். ஆனால் அத்தகைய சிறிய அளவுகளில் அவர்கள் ஆதாரத்தை கண்டறிவதற்கு டன் கணக்கில் ***பிட்ச்பிளெண்ட்*** தேவைப்பட வேண்டும்.







**க்யூரி** தாம்பதியர்களின் நண்பர் ஒருவர் ***பிட்ச்பிளெண்ட்*** கழிவுகளை, சுமைக்கூலியை மட்டும் கொடுத்து எடுத்துவர ஏற்பாடு செய்தார். இறுதியாக அது வந்து சேர்ந்தது!







❖ ***பிட்ச்பிளெண்ட்*** , பழுப்பு அல்லது கருமை நிரமுள்ள யுரேனியத்தின் பிரதான மூலப்பொருள்.

நான்கு ஆண்டுகளுக்கு அவர்களுடைய ஆராச்சியை தொடர்ந்தனர். **பியர்** அவரது ஆசிரியப் பணியையும் செய்தார். குடும்பச் செலவீனங்களை எதிர்கொள்ள **மேரியும்** ஆசிரியரானார்.

கடைசியாக 1902 மே மாதம் மாலையும் வந்தது. பியரின் தந்தை அவரது மனைவியின் மரணத்திற்குப் பிறகு, அவர்களோடு வந்து தங்கினார்.




அன்று இரவு **ஐரீன்** உறங்கியப்பிறகு அவர்கள் அந்த பழைய கொட்டகைக்குத் திரும்பினார்கள். இருளில் அவர்கள் ஒரு அழகான ஒளிர்வைக் கண்டார்கள்! இதற்கு முன்பு யாரும் அதை பார்த்ததில்லை. இது யுரேனியத்தின் பிரகாசம்.




இப்போது ***ரேடியம்*** அதிகாரப்பூர்வமாகவும் பெரிய தேவையுடையதாகவும் இருக்கிறது. புற்றுநோய்க்கு சிகிச்சையளிப்பதில் மருத்துவர்களுக்கு அவசியமாக இருக்கிறது. ஆனால் **மேரி** தனது அனைத்து பரிசோதனைகளில் இருந்து கிடைத்த அளவானது ஒரு தேக்கரண்டியின் முனையை நிரப்ப மட்டுமே போதுமானதாக இருந்தது.




**பியர்** ஒப்புக்கொண்டார். **கியூரி** தம்பதிகள் அவர்களின் கண்டுபிடிப்பிலிருந்து பணம் சம்பாதிக்க முயற்சித்ததில்லை.

ஜூன் 1903 ல் அவர் ஆற்றியப் பணிக்காக, **மேரி** தனது முனைவர் (டாக்டர் ஆஃப் சயின்ஸ்) பட்டத்தை பெற்றார்.




லண்டன் ராயல் சொசைட்டி பியரை விரிவுரை அளிக்க அழைத்தனர், மேலும் அவர்களுக்கு **டேவி** பதக்கம் வழங்கியது.




டிசம்பரில், இயற்பியலுக்கான உயரிய நோபல் பரிசு அவர்களுக்கும் **ஹென்றி பெக்ரெலுக்கும்** வழங்கப்படுவதாக அறிவிக்கப்பட்டது.




1904 இல், **பியர் சோர்போனில்** இயற்பியல் பேராசிரியராக இருந்தார், மேலும், **கியூரி** தம்பதிகளுக்கு ஒரு புதிய மகள் பிறந்தாள்.






அவர்கள் வீட்டிற்கு திரும்பிய மறுநாள் மழை பெய்தது. ஒரு ஷாப்பிங் பயணத்திலிருந்து மேரி தாமதமாக திரும்பி வந்தார். டாக்டர் **க்யூரி**யின் இரண்டு பழைய நண்பர்களைக் கண்டார். அவர்களின் முகங்கள் அவரை பயமுறுத்தின.











"நீ சொல்வது தவறு! ஆத்மா இல்லாத ஓர் உடலைப் போன்று ஒருவர் ஆனாலும், அவர் எப்போதும்போல அதே வேலையைத் தொடர்ந்து செய்ய வேண்டும்!" என்றார் **பியர்**. நான் முயற்சி செய்கிறேன்.



விரைவில், **சோர்போனில் பியர்** வகித்த இயற்பியல் பேராசிரியர் பணி அவருக்கு வழங்கப்பட்டது

பிரான்சில் அத்தகைய பதவியைப் பெற்ற முதல் பெண் நீங்கள்தான்!

நான் **பியரி**ன் பணியைத் தொடரவும் எமது குழந்தைகளுக்கு ஆதரவாக இருக்கவும் முயல்வேன்.



நவம்பர் 5 அன்று, **ஹால் ஆப் சயின்ஸ்** மாணவர்கள், நிருபர்கள், மற்றும் பொதுமக்களால் நிரம்பி இருந்தது. **மேடம் கியூரி** தனது முதல் விரிவுரை வழங்கவேண்டி இருந்தது. அவர் நுழைந்தார், ஒரு விறைப்பாக குனிந்து வணங்கிவிட்டு, பேசத் தொடங்கினார்.

ஒருவர், கடந்த பத்து வருடங்களில் இயற்பியலில் ஏற்பட்ட முன்னேற்றத்தை கருத்தில் கொண்டால் ...



சரியாக, பியர் தனது சொந்த குறிப்புகளில் நிறுத்தியிருந்த அதே புள்ளியிலிருந்து தனது விரிவுரையைத் தொடங்கினார்.

அவர் 1911 இல் இரண்டாவது நோபல் பரிசு உட்பட பல கௌரவங்களையும் பரிசுகளையும் வென்றார். பாரிசில் கட்டப்பட்டு வரும் புதிய **இன்ஸ்டிடியூட் ஆப் ரேடியம்** குறித்து அவர் அதிக அக்கறை கொண்டிருந்தார்.

**ருய் பியர் கியூரி**யின் பெயரால் அது அமைந்தது. அது, **பியர்** எப்போதும் கனவு கண்ட புதிய அற்புதமான ஆய்வகத்தைக் கொண்டிருக்கும்.

RUE PIERRE CURIE




**மேரியே** பல ஆண்டுகளாக ஆய்வுக்கூடத்தின் தலைமை வகித்தார்.

1921 ல் **ஈவ்** மற்றும் **ஐரீன்** ஆகியோருடன் அவர் **அமெரிக்கா**வுக்கு விஜயம் செய்தார். வெள்ளை மாளிகையில், ஜனாதிபதி **ஹார்டிங்** அமெரிக்க பெண்கள் நன்கொடை செலுத்தி வாங்கிய ஒரு கிராம் ரேடியத்தை அவருக்கு வழங்கினார்.



**ஐரினும்** அவர் மணந்த இளம் அறிவியலாளருமான **பிரடெரிக் ஜியோலிட்**, இருவரும் **கியூரி** தம்பதியினரின் பணிகளைத் தொடர்ந்தனர். 1935 ஆம் ஆண்டில் அவர்கள் செயற்கை கதிர்வீச்சு கண்டுபிடிப்புக்கான **நோபல்** பரிசை பகிர்ந்து கொண்டார்கள்.




**மேரி கியூரி** 1934 ஆம் ஆண்டில், பல ஆண்டுகளாக அவர் பணியாற்றிய ரேடியத்தினால் உண்டான **லுகேமியா**வினால் இறந்தார். அவர் அமைத்த ஒரு அடித்தளத்தின் மீது விஞ்ஞானிகள் அணுசக்தி யுகத்தை கட்டியெழுப்பினார்கள்.

